# ஒரு பையனும் 2 பெண்களும்

சா.கந்தசாமி

**ஊ**ரிலிருந்து ஆனந்தா வந்திருந்தாள். இன்னும் இரண்டு நாட்களில் அவளுக்கு ஓர் இண்டர்வியூ. சந்தானந்தான் ஏற்பாடெல்லாம் பண்ணிவைத்தான். அவள் ஒருவிதத்தில் உறவு. என்ன உறவென்று தீர்மானிக்க முடியாது. ஆனால், அவன் மனைவிமட்டும் அவளைத் தன் சகோதரி என்று சொல்லிக்கொள்வாள்.

புதன்கிழமை ஆனந்தாவுக்கு இண்டர்வியூ. அநேகமாக வேலை கிடைத்துவிடும். இண்டர்வியூ என்பது ஒப்புக்குத்தான். உள்ளுக்குள்ளேயே எல்லாம் நடந்துவிட்டன. அதற்கு ஒன்றரை மாதங்கள் சந்தானம் நடையாய் நடந்தான்; நோட்டுக்கள் கைமாறின. பணத்தைப் புரட்ட ஆனந்தா கொஞ்சம் கஷ்டப்பட்டாள். ஆனாலும் என்ன? நிரந்தரமான உத்தியோகம். நாற்காலியில் ஃபானுக்குக் கீழே உட்கார்ந்து எழுதும் கௌரவமான வேலை. ஊருக்குப் போய்வர இலவசப் பாஸ்; மருத்துவ வசதி; வீடு கட்டிக்கொள்ள 'லோன்' - எல்லாம் உண்டு. ஒரு பெண் பிள்ளை. பத்தொன்பது வயது. இஷ்டப்பட்டால் பணம் பண்ணுவது அப்படி யொன்றும் கஷ்டமில்லை.

சந்தானத்திற்குக் கொஞ்சம் குறைச்சலாகக் கிடைத்தது. ஆனாலும் திருப்தியுற்றான். சொந்தக்காரப் பெண்

என்பதற்குத் தன் பழக்கத்தை விட்டுவிட முடியவில்லை. அவனை மனைவிகூட லேசாகக் கண்டித்தாள். பணத்தை வாங்கிக் கொண்டு ''என்னமோ பழக்கமா போயிடுச்சு. வாங்காம இருக்க முடியலே'' என்று சிரித்தான்.

ஆனந்தா வேலைக்கு வருவதில் அவளுக்கு இஷ்டம். படிப்படியாக நான்கு குழந்தைகள். முதல் பையனுக்கு ஐந்து வயது. அப்புறம் மூன்றும் ஒன்றரையுமாக இரண்டு. கையில் ஐந்து மாதப் பெண். ஆனந்தா வந்தால் வேலைக்கு ஒத்தாசை; குழந்தைகளுக்கு ஒரு துணை. ஆபீசுக்குப் போவதற்குள் சமையலை முடித்தால் போதும்; அதுவே பெரிய உபகாரம் பண்ணியதுபோல். ரொம்ப நாட்களாகத் தெரிந்த - சொந்தக்காரப் பெண். அடங்கி நடப்பாள்!

தம்பிகூட இங்குதான் இருக்கிறான். பிடித்தால்... பிடிக்கிறது என்ன? ஆனந்தா வருகிறாள் என்றதும் சந்தோஷமுற்றான். தானே ரயில் நிலையத்திற்குப் போய் அழைத்துக்கொண்டு வந்தான்.

இரண்டு பேரும் ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தவர்கள். எட்டாம் வகுப்பு வந்தவுடனே அவன் சிதம்பரத்திற்குப் போனான். ஓர் உபகாரச் சம்பளம் கிடைத்தது. தட்டுத் தடுமாறிப் படித்து மேலே வந்துவிட்டான். அவன் வேலையில் சேர்ந்ததும் சந்தானம் தன் வீட்டிற்கு அழைத்துக் கொண்டான்.

அவன் குணத்தில் சந்தானத்திற்கு ஒரு பிடிப்பு; தணிந்து போகிறவன். சம்பளப் பணத்தைக் 'கவ'ரோடு கொண்டுவந்து கொடுத்துவிட்டுச் செலவிற்குக் காசு கேட்பான். இதுதான் அவன் அக்காவை ஒரேயடியாகக் கவர்ந்தது.



''எங்க தம்பி மாதிரி ஊரிலே உண்டா!'' என்று சொல்லிக்கொண்டே இருப்பாள்.

ஞாயிற்றுக்கிழமை வந்தால் மூன்று குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு 'பார்க்'கிற்குப் போய்விடுவான். நான்கு மணிக்குப் போனால் ஏழரைக்குத்தான் திரும்புவான். அது ஒரு பழக்கம். அப்புறம் வீட்டில் கைக்குழந்தை; அதற்கு அழக்கூட ஜீவன் கிடையாது. இழுப்பு; கர் கர் என்று இழுத்துக்கொண்டே இருக்கும்.

அதைத் தூக்க அக்கா குனியும்போது கணவன் சந்தானம் படுத்தபடியே அருகே இழுத்து அணைத்துக் கொள்வான். இரண்டொரு தடவைகள் இம்மாதிரியான காட்சியை அவன் கண்டிருக்கிறான். ரத்தம் கதகதப்படையும்; தலை கவிழும்; இது ஒன்றும் புதுசில்லே என்ற எண்ணம் பரவும்.

எட்டு மாதங்களுக்கு முன் வேலை கிடைத்த சமயத்தில் தான் அக்கா வீட்டிற்கு வந்து சேர்ந்தான். பரீட்சை எழுதியவுடனே முதலில் அண்ணன் வீட்டிற்குத்தான் போனான். அவன் மனத்தில் ஒரு தீர்மானமும் இல்லை. பரீட்சை தேறிவிடும். நல்ல மார்க்குகளும் கிடைக்கும். அப்புறம் என்ன பண்ணுவது என்பது பற்றி அவன் யோசிக்கவில்லை.

அண்ணி அவனை ரொம்ப உற்சாகத்தோடு வரவேற்றாள். அப்போதுதான் முதல் முதலாகப் பார்க்கிறான். அண்ணனைவிட இரண்டு மூன்று வயது அதிகம் போலத் தெரிந்தது. ஆனால் நல்ல வளர்த்தி; சிவப்பு. மதமதவென்று உடல். சிரிக்கும்போது உடல் முழுவதும் குலுங்கும். அவனோடு ஒட்டுதலாகப் பழகினாள். விகற்பமில்லாத உபசரிப்பு; இனிமையான பேச்சு. அண்ணா இதில்தான் மயங்கினானோ?

சகஜமாகத் தோள்மீது கைவைத்து - இரண்டு கைகளையும் பற்றிக்கொண்டு - முகவாயைத் திருப்பி - அவள் பேசும்போதெல்லாம் கூச்சமாக இருக்கும். ஓடிப்போய்விட வேண்டும் என்ற எண்ணம் வரும். ஆனால் அவள் கண்களைப் பார்த்ததும் சந்தோஷமுறு வான்.

அவள் நர்ஸ். அண்ணா ஆஸ்பத்திரியில் மூன்று மாதங்கள் இருந்தபோது பழக்கம் ஏற்பட்டது. அப்புறம் இரண்டு மாதங்கள் கழித்து கல்யாணம் நடந்தது. அதற்கு அவன் வரவில்லை. வராமல் போனதற்காக இப்போது வருத்தப்பட்டான். இவ்வளவு சிரிப்புங் கும்மாளமாகவும் இருக்கும் அண்ணி கல்யாணக்கோலத்தில் எப்படி இருந்திருப்பாள்?

அவன் வந்து பதினைந்து நாட்கள் சென்றுவிட்டன. அண்ணியும் வேலைக்குப் போன பிறகு அவன் சலிப்புறுவான்; சோர்வு மூண்டெழும். அவள் வரும் வரையில் வானொலியைத் திருகிக் கொண்டிருக்க வேண்டும். எத்தனை நேரந்தான் நிலைய வித்வான்களின் வாத்தியக் கச்சேரியைக் கேட்பது?

வாசலுக்கு வந்து சாலையை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தான். யாரோ ஒருத்தன் யாரோ ஒருத்தியை அணைத்தவாறு போகிறான். அவன் வேகமாகத் திரும்பி வந்து கட்டிலில் சாய்ந்தான். நாடாக்கள் அழுந்த அழுந்த ஒரு காட்சி நினைவிற்கு வந்தது.

அண்ணி தங்கை புவனேஸ்வரி வந்திருந்தாள். இரண்டு நாட்களுக்கு முன்னால்தான் போனாள். ஆனாலும் என்ன? ஒரு புதிய அனுபவம். இச்சாபூர்த்தி. அதுவரை



யில் தெரியாதிருந்ததை அவள் உணர்த்தினாள். எவ்வளவு தைரியம்? அண்ணி பக்கத்தில் படுத்திருக்கும்போதே - அவன் முதல் நாள் பயந்து போனான்! ஆனால் அடுத்த நாள், ''உங்களுக்குத் தைரியம் வந்துட்டதே'' என்று சிரித்தாள்!

அவள் காலையில் ஊருக்குப் போனாள். அமைதியாக உட்கார்ந்து அவன் யோசித்துப் பார்த்தான். திடீரென்று எரிச்சல் மூண்டது. கையை மடக்கித் தரையில் குத்தினான்; தலையைப் பிராண்டிக் கொண்டான். அண்ணி எவ்வளவோ கேட்டுக்கொண்டும் அவன் தங்கவில்லை. ஊருக்குப் போய் விட்டான்.

அண்ணியைப் பார்க்கும் போதெல்லாம் புவனேஸ்வரி ஞாபகம் வருகிறது. இங்கேயே வேலை கிடைத்தது. ஆனால் அண்ணி வீட்டில் ஜாகை வைத்துக் கொள்ள வில்லை. அவன் தனித்திருக்க விரும்பினான். ஆனால் தனிமை கிடைக்கவில்லை. சந்தானத்தோடு சேர்ந்து விட்டான்.

எட்டு மாதங்கள் சென்றுவிட்டன. ஆனந்தா வந்திருக் கிறாள், அவள் கண்களைப் பார்த்ததும் பயந்துபோனான். அவளை ரொம்ப நாட்களாகவே அறிவான். அவளிடம் அன்புண்டு, உற்ற அன்பு. அதிரப் பேசமாட்டாள். அதுவொரு மென்மையான குணம். படிப்பு அவ்வளவாக வராது. இரண்டு முறைகள் தவறி அப்புறம் தேறினாள். டைப்ரைட்டர் தேர்வுக்குக்கூட அத்தான் ஏதோ செய்தார் என்று கேள்வி.

அவள் நடந்து செல்லுகையில் பின்னே நின்று பார்த்தான்.

கொஞ்சங் கவர்ச்சி, எழிலான நாகரிக வார்ப்பில் நடக்கும்போதே அசைந்தொளிரும் அழகு - இவள் பழைய ஆனந்தாதானா?

அவளைத் தாண்டிக்கொண்டு முன்னே சென்றான். அவள் தலையசைத்து முறுவலித்தாள்.

ஒரு நாள். அக்கா குழந்தையை எடுத்துக்கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டாள்.

அவளுக்குச் சாப்பாடு கொண்டுபோகவேண்டும். அவன் ஆபீசில் 'பார்மிஷன்' போட்டுவிட்டு வந்தான். கதவு லேசாகச் சாத்தி இருந்தது. வேகமாக அடித்துத் திறந்துகொண்டு உள்ளே போனான். கண்ணாடிக்கு முன்னே வெறும் பாவாடையோடு நின்றுகொண்டிருந்த ஆனந்தா ஓடி மறைந்தாள்.

அவனுக்கு வெட்கமாக இருந்தது. குழம்பிப் போனான். ஆனந்தாவுக்கு என்ன வந்துவிட்டது? அவன் தலை குனிந்தபடியே எதிர் அறைக்குப் போனான். அங்கே சந்தானம் ஜன்னல் கம்பியைப் பிடித்துக்கொண்டு நின்றான்.

சந்தானம் அவனிடம் சொன்னான். ''பொம்பளப் பிள்ள இருக்கிற வூட்டுலே எப்படி வர்றதுன்னே உனக்குத் தெரியலே!''

அவன் நிமிர்ந்து பார்த்தான்.

'அயோக்கிய ராஸ்கல். அவளுக்குத் தெரியாம மறஞ்சு நிக்கறவன் ஆருடா?' என்று கத்தவேண்டும்போல இருந்தது.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, ராத்திரியில் சந்தானம் தன் மனைவியிடம் சொன்னான்: ''அவனுக்குச் சீக்கிரமா கல்யாணம் பண்ணிடனும்...''



''என்ன?''

''இல்லாட்டா நம்ம மானம் போயிடும்-''

படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்துகொண்டு அழுதான்.

அடுத்த நாள் அவன் வீட்டைவிட்டுப் போய் விட்டான்.

**(செப்டம்பர் 1968)**